2 பக்கங்கள் 15 காசுகள்

பதிவு எண் எம். 8798

# தீக்கதிர்

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி [மார்க்சிஸ்ட்] நாளிதழ்

கதிர் 12. மதுரை 27—11—74 புதன் மலர்: 274

## ஒரு லட்சம் கயிறு தொழிலாளர் போராட்டம் தீவிரமாகும்

திருவனந்தபுரம், நவ. 25—

ஒரு நாளைக்கு ரூ 2.40 மட்டுமே கூலி பெற்று வரும் கயிறுத் தொழிலாளர்கள், தங்களுக்கு கூலி உயர்வு வேண்டும் என்று கோரி கடந்த 25 நாட்களாக வேலை நிறுத்தம் செய்து வருகிறார்கள்.

இப்பிரச்சினையில் கேரளத்தில் ஆட்சி புரியும் வலது கம்யூனிஸ்ட் காங்கிரஸ் கூட்டணி அரசு எவ்வித சிரத்தையும் காட்டவில்லையாதலால் போராட்டம் தீவிரப்படுத்தப்படும் என்று தொழிலாளர் தலைவரும், மாவட்ட மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி செயலாளருமான தோழர் ஸ்ரீதரன் அறிவித்துள்ளார்.

## ரூ. 68 லட்சம் உரம் தீயில் கருகி நாசம்

பவநகர், நவ. 25—

நாட்டில் ஒரு புறத்தில் குறைந்த விலையில் போதிய உரம் கிடைக்காமல் விவசாயிகள் அவதிப்படுகையில், இங்குள்ள கிடங்கு ஒன்றில் ரூ. 68 இலட்சம் பெறுமான ஆயிரக்கணக்கான டன் உரம் தீயில் கருகி நாசமானதாக செய்தி வந்துள்ளது.

இந்த உரம் ருமேனியாவிலிருந்து வரவழைக்கப்பட்டதாகும். தீ விபத்துக்கான காரணம் இன்னும் கண்டு பிடிக்கப்படவில்லையாம்.

### மோசடி, குண்டர்கள் மிரட்டல், பணபலம், நிருவாகத் தலையீடு கூடாது

### ஒவ்வொரு கட்சிக்கும் ஓட்டுகளுக்கு ஏற்ப சீட்டுகள் கிடைக்க வேண்டும்

# தேர்தல் முறையில் மாறுதல் வேண்டும்

## மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி ஆலோசனைகள்

புதுடில்லி, நவ. 25—

**"தேர்தல்களை மோசடித் தேர்தல்களாக நடத்தி வரும் ஆளும் கட்சியின் மோசடிச் செயல்களைக் குறைக்க வேண்டும். மோசடித் தேர்தல்கள் நடைபெறாமலிருக்க வேண்டுமானால், எல்லா மட்டங்களிலுமே, சர்வ கட்சிகளையும் கொண்ட கமிட்டி மேற்பார்க்க வேண்டும்.**

**தேர்தல் நடத்துவதில் ஏற்படும் சகலவிதமான புகார்களையும் இந்த சர்வ கட்சிக் கமிட்டியைக் கலந்தே தீர்க்கப்பட வேண்டும்.**

**ஒரு குறிப்பிட்ட தொகுதியில் அல்லது குறிப்பிட்ட ஒரு வாக்குச் சாவடியில் மோசடி நடந்திருப்பதாக சர்வ கட்சிகளும் ஒருமனதாகக் கருதினாலும் சரி, அல்லது பெரும்பாலான எதிர்க்கட்சிகள் கருதினாலும் சரி, அங்கு நடைபெற்ற தேர்தலை ரத்து செய்துவிட்டு, புதிய தேர்தல் நடத்தப்பட வேண்டும்".**

**மேலே கண்ட ஆலோசனைகளை, தேர்தல் சீர்திருத்தக் கமிட்டியின் முன்னால் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி முன்வைத்தது.**




ஒரு தொகுதியில் ஒரு வேட்பாளரை மட்டுமே தேர்ந்தெடுக்கக்கூடிய இன்றைய தேர்தல் முறையை மாற்றி அமைக்க வேண்டும் என்ற கருத்துடன் திரு ஜெயப்பிரகாஷ் நாராயண் பல்வேறு கட்சியினருக்கும் எழுதியிருந்தார்.

தேர்தல் சீர்திருத்தங்கள் எவ்வாறு இருக்க வேண்டுமென்று அவர் கேட்டிருந்த கேள்விகளுக்கு பல்வேறு கட்சியினரும் தத்தம் பதில்களை அனுப்பியுள்ளனர்.

இன்றைய இந்திய தேர்தல் முறையானது பிரிட்டிஷ் முறையைப் பின்பற்றியதாகும்.

அதாவது, ஒரு தொகுதியில் அநேக வேட்பாளர்கள் போட்டியிட்டால் பதிவான வாக்குகளில் எந்த வேட்பாளருக்கு கூடுதலான வாக்குகள் விழுந்ததோ, அந்த வேட்பாளரே வெற்றி பெறும் முறை. இதில் மொத்தம் பதிவான வாக்குகளில் சரிபாதிக்கும் குறைவாகக் கிடைத்தாலும் வெற்றிபெற்றுவிடலாம்.

ஆனால், விகிதாச்சாரப் பிரதிநிதித்துவ முறையில் அப்படி அல்ல. ஒவ்வொரு கட்சியும் நாடு முழுவதும் எவ்வளவு வாக்குகள் பெற்றதோ, அந்த சதமானத்திற்கு ஏற்றாற்போல அக்கட்சிகளுக்கும் பிரதிநிதித்துவம் அளிக்கப்படும்.

இன்னும் பல்வேறு தேர்தல் முறைகளைப் பற்றியும் கருத்துக்கள் அறியப்பட்டன.

### இ. எம். எஸ்.—பி. ஆர்.

இதற்கென 6 பேர் கொண்ட ஒரு கமிட்டியை, பம்பாய் உயர் நீதிமன்றத்தின் ஓய்வு பெற்ற நீதிபதி திரு வி. எம். தார்குண்டே தலைமையில் அமைக்கப்பட்டு டில்லி, பம்பாய், சென்னை முதலான நகரங்களில் பல்வேறு கட்சிகளின் தலைவர்களையும் சந்தித்து, தேர்தல் சீர்திருத்தம் சம்பந்தமான அவரவர் கருத்துக்களைக் கேட்டறிந்தது. இந்தக் கமிட்டிக்கு ஜனநாயகத்திற்கான வாக்காளர் தேர்தல் சீர்திருத்தக் கமிட்டி என்று பெயர்.

இக்கமிட்டியின் முன்னர் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர்கள் இ. எம். எஸ். நம்பூதிரிபாடும் பி. ராமமூர்த்தியும் கட்சியின் கருத்துக்களை எடுத்து கூறினர்.

### குண்டர் பயமில்லாத சூழ்நிலை வேண்டும்

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி, மோசடித் தேர்தலில் ஆளும் கட்சி ஈடுபடுவதை தடுக்க வழி கூறியது மட்டுமின்றி, குண்டர்களின் தாக்குதல் மிரட்டல்களும் இருக்கக்கூடாது என்று வற்புறுத்தியது.

"தேர்தல் பிரச்சாரம் நடைபெறும் காலகட்டத்தில், எல்லாக் கட்சிகளும் வாக்காளர்களை அணுக அனுமதிக்கப்பட வேண்டும். வாக்காளர்களிடம் செல்லும்பொழுது குண்டர் படையினர் தாக்குவார்கள் என்ற அச்சுறுத்தல் சூழ்நிலை இருக்கக் கூடாது.

இப்படிப்பட்ட பயமற்ற சூழ்நிலை எந்த ஒரு தொகுதியிலாவது இல்லை என்ற நிலைமை ஏற்பட்டால், மறுபடியும் அந்தத் தொகுதியில் சுமுகமான சூழ்நிலை உருவாகும் வரையிலும், தேர்தலை ஒத்திப்போட வேண்டும்"—என்றும் மார்க்சிஸ்ட் கட்சி வற்புறுத்தியது.

நியாயமான தேர்தல் நடத்தப்படுவதற்கு இதுதான் அடிப்படையான முக்கியத்துவம் வாய்ந்த முன்னுக்கு வந்துள்ள பிரச்னையாகும் என்று மார்க்சிஸ்ட் கட்சி அழுத்தம் திருத்தமாக எடுத்துக் காட்டியது.

இன்றைய தேர்தல் முறைகளில் மூன்று முக்கிய குறைபாடுகள் உள்ளன என்றும் இந்த மூன்று குறைபாடுகளையும் களைந்தெறிய வேண்டும் என்றும் மார்க்சிஸ்ட் கட்சி சுட்டிக் காட்டியது.

### ஓட்டுக்கு ஏற்றாற் போல சீட்டு வேண்டும்

முதலாவதாக, இன்றைய அரசியல் சட்ட விதி முறைகளில், மக்களின் பிரதிநிதித்துவ முறையானது, மக்களின் விருப்பத்தைப் பிரதிபலிப்பதைக் காட்டிலும், மக்களின் விருப்பத்தைச் சிதைப்பதாகத்தான் இருக்கிறது. அரசியல் கட்சிகள் எந்த அளவு ஓட்டுகளை பெற்றனவோ, அதற்கேற்ற முறையில் சீட்டுகள் கிடைப்பது இல்லை.

### தேர்தலில் பணம் விளையாடக்கூடாது

இரண்டாவது, குறைபாடு என்னவென்றால், தேர்தலில் தண்ணீர்ப்பட்ட பாடாக பணம் விளையாடுகிறது. இந்த தேர்தல் அமைப்புக்குள்ளேயும்கூட, ஓட்டுகள் தங்களுக்கு அனுகூலமாக விழும் முறையில் தேர்தல் லீலைகள் புரிய செல்வச்சீமான்களால் முடிகிறது. அவ்வாறு செய்யும் நிலைமையில் அவர்கள் இருக்கிறார்கள்.

பணக்காரர்கள் தங்கள் பணபலத்தால் வாரிக் கொள்ளும் மட்டும் வாரிக் கொண்டது போக, மிச்சம் மீதியுள்ள குறைவான ஓட்டுகள்தான், மக்களின் விருப்பத்தைப் பிரதிபலிக்கக்கூடிய உண்மையான ஓட்டுகளாக விளங்குகின்றன.

### அதிகார வர்க்கத்தின் தலையீடு கூடாது

அடுத்து, மூன்றாவது குறைபாடு என்னவென்றால், தேர்தலில் அதிகாரிகளைக் கொண்டு, ஆளும் கட்சி தன் காரியத்தை சாதித்துக் கொள்ளுவதாகும்.

மோசடித் தேர்தல், குண்டர்களின் அட்டகாசம், பண பலம் ஆகியவை போதாது என்று, அதற்கு மேலும் அரசு நிருவாக இயந்திரத்தையும் ஆளும் கட்சியினர் பயன்படுத்துகிறார்கள்.

ஆளும் கட்சி தன்னுடைய ஆட்சி அதிகாரத்தை நிலைநிறுத்திக் கொள்ளுவதற்காக, அரசாங்க நிருவாக இயந்திரத்தை அயோக்கியத்தனமான வழிகளில் பயன்படுத்திக் கொள்ளுகிறது. இதை ஒழிக்க வேண்டும்.

### திருப்பி அழைக்கும் உரிமை வேண்டும்

அரசியல் சட்டத்தில், விகிதாச்சாரப் பிரதிநிதித்துவ முறையும், தேர்ந்தெடுக்கப்பட்ட தங்கள் பிரதிநிதி, தன் வாக்குறுதிப்படி நடந்து கொள்ளாவிட்டால் அவரைத் திருப்பியழைக்கின்ற உரிமையும் வாக்காளர்களுக்கு இருக்கவேண்டும்.

இந்த யோசனையை முன் வைக்கும் போதெல்லாம், "இது ஸ்திரமற்ற தன்மையை உண்டாக்கி விடும்"—என்று எதிர்ப்பு தெரிவிக்கப்படுகின்றது. இந்த எதிர்ப்பு, தகுதியான எதிர்ப்பு அல்ல.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி கோருவது எல்லாம், அரசியல் சட்டத்தில் திருத்தம் செய்யவேண்டுமென்பதுதான்.

அதாவது ஒவ்வொரு கட்சிக்கும் எவ்வளவு பொதுஜன ஆதரவு இருக்கிறதோ, அந்த ஆதரவின் அளவுக்கு ஏற்றவாறு, சட்டமன்ற, நாடாளுமன்ற, மற்றும் தேர்ந்தெடுக்கப்பட்ட சபைகளில், அக்கட்சிகளுக்கு உரிய பிரதிநிதித்துவத்தை உத்தரவாதம் செய்யவேண்டுமென்பதுதான். இதுதான் உண்மையான பிரதிநிதித்துவத்தை எதிரொலிக்க சுலபமான வழியாகும்.

### தேர்தல் செலவுகளை கம்மிப் படுத்துக!

மற்றும் பல யோசனைகளையும் மார்க்சிஸ்ட் கட்சி முன்வைத்தது.

அதாவது:

"வேட்பாளர்கள் தரப்பில் செலவழிக்கப்படும் தேர்தல் செலவுகளைக் குறைக்கவேண்டும்.

அதுமட்டுமல்ல,

அந்த வேட்பாளரும் அவரது கட்சியும் எத்தனை சுவரொட்டிகளை ஒட்டின? எத்தனை வண்டி வாகனங்களைப் பயன்படுத்தின? எத்தனை விளம்பர நோட்டீஸ்களை வெளியிட்டன? அவற்றுக்கெல்லாம் என்னவளவு பணம் செலவு ஆயிற்று? — என்பதையும் கணித்து, ஒரு குறிப்பிட்ட அளவில் குறைக்கச் செய்ய வேண்டும்.

ஏராளமான செல்வ வசதிகளையுடைய வேட்பாளர்களும், கட்சிகளும் அச் செல்வ வசதிகளைப் பயன்படுத்தி சிறிய கட்சிகளையும் தனிப்பட்ட வேட்பாளர்களையும் பாதிக்கும்படிச் செய்வதை அனுமதிக்கக் கூடாது.

### வானொலி

அகில இந்திய வானொலியும், டெலிவிஷனும், தேர்தல் பிரச்சார காலக்கட்டத்தில், சர்வகட்சி கமிட்டியின் மேற்பார்வையின் கீழ் வைக்கப்படவேண்டும்.

### போக்குவரத்துக்கள்

வழக்கமான ரயில்வே, பஸ் போக்குவரத்துகள், மற்றும் அதிகாரிகளுக்காகப் பயன்படுத்திக் கொள்ளப்படும் வண்டி வாகனங்கள் தவிர—மற்றெல்லா வண்டி வாகனங்களையும் தேர்தல் பிரச்சாரம் தடை செய்யப்பட்ட நேரத்திலிருந்து — தடை செய்துவிட வேண்டும், வழக்கமான பஸ் சர்வீஸ்களைக்கூட, தேர்தலுக்கு முதல் நாளைய நள்ளிரவிலிருந்து, மறுநாள் மாலை வாக்குப் பதிவு முடியும் வரை — தடை செய்துவிட வேண்டும்.

மற்றும் 18 வயதுக்கு மேற்பட்டவர்களுக்கும் வாக்குரிமை வழங்கவேண்டுமென்றும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி வற்புறுத்தியது.

## "செம்மலர்" எழுத்தாளர் கூட்டம்

### 'முற்போக்கு' எழுத்தாளர் சங்கம்' அமைக்க முடிவு

மதுரை, நவ. 25—

'செம்மலர்' எழுத்தாளர்களின் சிறப்புக் கூட்டம் மதுரை நகரில் இம்மாதம் 23, 24 தேதிகளில் வெகு சிறப்பாக நடைபெற்றது.

செம்மலரின் இலக்கியப் படைப்புக்களை நல்லமுறையில் வளர்த்திடும் நோக்குடன் கூட்டப்பட்ட இக்கூட்டத்திற்கு, தமிழ்நாட்டின் எல்லா மாவட்டங்களிலிருந்தும் 35 எழுத்தாளர்கள் கலந்து கொண்டனர்.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மாநிலச் செயலாளர் தோழர் ஏ. பாலசுப்ரமணியம், செயற்குழு உறுப்பினர்கள் தோழர்கள் எம். ஆர். வெங்கட்ராமன், என். சங்கரய்யா, கே. முத்தையா, ஏ. நல்லசிவன் ஆகிய தலைவர்கள் கலந்து கொண்டனர்.

இக்கூட்டத்திற்கு தோழர் ஏ. பாலசுப்ரமண்யம் தலைமை வகித்தார்.

அவர் தமது தலைமை உரையில், எழுத்தாளர்களுக்கு அரசியல் பார்வை தெளிவாக இருப்பது மிக மிக அவசியம் என்று குறிப்பிட்டு; இன்றைய தேசிய, சர்வ தேசிய நிலைமைகள் குறித்து விரிவாகப் பேசினார்.

அடுத்து, பேசுகையில் தோழர் என். சங்கரய்யா 'இலக்கியத்தில் மார்க்சியப் பார்வை' என்பது குறித்து விளக்கவுரை தந்தார். சார்பு நிலையற்ற எழுத்தாளர்கள் எனவர்களே இல்லை என்பதைச் சுட்டிக் காட்டி, நாம் திட்டவட்டமாக பாட்டாளி வர்க்கச் சார்புடையவர்கள் என்று சொல்லிக் கொள்வதிலும் மக்களின் ஜனநாயகத்திற்காகப் பாடுபடுவதிலும் பெருமைப் படுகிறோம்" என்றார்.

அடுத்து 'செம்மலர்' ஆசிரியர் தோழர் கே. முத்தையா பேசுகையில் சென்ற ஆண்டு பிப்ரவரி மாதம் நடைபெற்ற எழுத்தாளர் கூட்டத்திலிருந்து இதுவரை செம்மலரில் வெளியான சிறு கதைகள், தொடர்

[2-ம் பக்கம் பார்க்க]

### காங்கிரசுடன்

## வேறுபாடு என்பது உண்மையே

### முஸ்லிம்லீக் தலைவர் ஒப்புதல்

கொச்சி, நவ. 24—

கேரளத்திலும் சரி, வெளியிலும் சரி எங்களுக்கும், ஆளும் காங்கிரசுக்கும் வேறுபாடுகள் நீடிக்கின்றன. அவைகளை மறைப்பதில் எவ்வித பயனும் இல்லை என இந்திய முஸ்லீம் லீக் தலைவர் இப்ராகிம் சுலைமான் சேட் கூறினார்.

அவர் வெளியிட்டுள்ள அறிக்கையில் மேற்கண்டவாறு கூ... ...ளார்.

எனினு... கேரள கூட்டணி ... ...சாங்கம் ஆரோக்கியத்த... செயல்பட... எ... ...பாடும் பரிசீலனை ...ரம்,

...ச் சமய... லுட... எம் ...பே... மீது ...ட்டன ...போம் ...புற... ...ம ...யும்.

போம் என்றும் கூறினர்.

அதிருப்தியாக நிறைவேற்றப்பட்ட கேரள பல்கலை கழக மசோதா கவர்னரின் அவசரச் சட்டத்தின் மூலம் கோழிக்கோடு பல்கலைக்கழகத்திற்கும் விரிவுபடுத்தப்படுகிறது. இது ஒரு மிக முக்கிய பிரச்சனை என்றும் அவர் குறிப்பிட்டார்.

அரசியல் சட்டத்திற்கு விரோதமான குஜராத் பல்கலைகழக சட்டதிருத்த விதிகளை குஜராத் உயர்நீதி மன்றம் நிராகரித்துவிட்டு மனுதாரர் மக்களின் அடிப்படை உரிமைகளை பற்றி முடிவு எடுத்துள்ளது. இம்முடிவை கேரள அரசாங்கம் கணக்கில் எடுக்காதிருப்பது ஆச்சரியமாக இருக்கிறது என்றும் அவர் கூறினர்.

மேலும் செ... ...ற காலத்தில் செய்த தவ... ...களை உணர்ந்த கா... ...லகா... தி...

# தீக்கதிர்

## மக்களை ஏமாற்ற மீண்டுமொரு காங்கிரஸ் திட்டம்

உத்தர பிரதேசத்தில், நரோரா என்னுமிடத்தில், அகில இந்திய காங்கிரஸ் தலைவர்கள் மூன்று நாட்கள் கூடிப் பேசினார்கள். மிக ரகசியமாகக் கூட்டம் நடந்ததாம். நாட்டின் அரசியல் பொருளாதார நிலைமைகளைப் பற்றி சாங்கோபாங்கமாகப் பேசிக் கொண்டார்களாம். இறுதியில் எல்லாத் தலைவர்களும் ஏகோபித்து ஏற்றுக் கொண்டதாகச் சொல்லப்படும் 13 அம்சத் திட்டமொன்று வெளியிடப்பட்டிருக்கிறது.

காங்கிரஸ் கட்சி ஒன்றுயிருந்த காலத்து புவனேசுவர் காங்கிரஸின் "சோசலிஸ்ட்" திட்டத்திலிருந்து பெங்களூர் 6 அம்சத் திட்டம், பம்பாய் 10 அம்சத் திட்டம்—இம்மாதிரி காங்கிரஸ் கட்சி சந்தர்ப்பத்திற்கேற்ப, மக்களை ஏமாற்றுவதற்கு வெளியிட்ட திட்டங்களுக்கு என்றுமே பஞ்சமிருந்ததில்லை. அவை நிறைவேற்றப்படுவதுமில்லை என்று மக்களுக்குத் தெரியும். இந்த 13 அம்சத் திட்டமும் அத்தகைய பல "பேப்பர்" வாக்குறுதிகளின் உடன் பிறப்பே.

வழக்கம்போல் இத்தத் திட்டத்திலும் ஏழை மக்களின்பால் ஏட்டில் பரிவு நிறையக் காட்டப்பட்டிருக்கிறது. ஆனால் உழைப்பாளி மக்களுக்கு உண்மையில் நிவாரணம் அளிக்கவேண்டுமென்றால் அதற்கு இன்றியமையாத நடவடிக்கைகள் பற்றி மூச்சுப் பேச்சில்லை. அன்னிய நாட்டு முதலாளிகளின் உடமைகளை எடுத்துக் கொள்வது பற்றியோ இந்நாட்டு ஏகபோக முதலாளிகளையும் நிலப்பிரபுக்களையும் நிர்தாட்சண்யமாகக் கட்டுப்படுத்துவது பற்றியோ ஒரு வார்த்தையும் காணோம். இன்று மக்களை வாட்டி வதைத்து வரும்படியான விலைவாசி உயர்வு, வேலையின்மை, மக்கள் மீது திணிக்கப்பட்டுள்ள தாங்க முடியாத வரிச்சுமை—முதலியவற்றை நீக்குவதற்கு ஒரு யோசனையும் இடையாது. இவையனைத்தும் காங்கிரஸ் கொள்கைகளின் விளைவேயல்லவா? எனவே அந்தக் கொள்கைகளையே அடிப்படையாகக் கைவிட்டாலொழிய பல அம்சங்களைக் கொண்ட, வெறும் காகிதத் திட்டங்களை வெளியிடுவது மக்களின் எதிர்ப்பை சமாளிக்கஇயலும் பயனற்ற ஒரு முயற்சியேயாகும்.

இப்போது வெளியிட்டுள்ள 13 அம்சத் திட்டத்தில் விவசாயத் தொழிலாளர்களையும் கிராமப்புற இதர ஏழைமக்களையும் திரட்டப் போகிறோமென்று அழுத்தமாகக் கூறியிருக்கிறார்கள். ஆனால் கிராம ஏழை மக்களுக்கும் விவசாயத் தொழிலாளர்களுக்கும் நன்மை செய்ய வேண்டுமென்றால் நிலப்பிரபுக்களையும் பெருமிராசுதார்களையும் கட்டுப்படுத்த வேண்டுமே! காங்கிரஸ் கட்சியின் தூண்களாகவும் நன்கொடையாளர்களாகவும் விளங்கும் அவர்களை காங்கிரஸ் கட்சி விரோதித்துக் கொள்ளுமென்ற புளுகை நம்மை நம்பச் சொல்லுகிறார்கள்.

ஆனால்—விவசாயத் தொழிலாளர்களைப் பிளவுபடுத்தவும், அவர்களுக்கு ஏற்கனவே உள்ள ஸ்தாபனங்களை உடைக்கவும் காங்கிரஸ்காரர்கள் முனைப்புடன் செயல்படுவார்களென்று நிச்சயம் எதிர்பார்க்கலாம். விவசாயத் தொழிலாளர்கள் தங்கள் ஒற்றுமையைப் பாதுகாத்துக் கொள்ள எச்சரிக்கையுடனிருப்பது அவசியமே.

கிராமங்களில் மட்டுமின்றி, மாணவர்கள் மத்தியிலும் ஐஎன்டியூசி, யுவ காங்கிரஸ் முதலிய துணை ஸ்தாபனங்களுடன் இறங்கி வேலை செய்யப் போகிறார்களாம். இப்போது 1 லட்சமாக இருக்கும் காங்கிரஸ் தொண்டர் படையை 5 லட்சமாகப் பெருக்கிக் கொள்ளப் போகிறார்களாம்.

காங்கிரசின் இந்தப் புதிய 13 அம்சத் திட்டத்தில் யாரும் ஏமாறப் போவதில்லை. காங்கிரஸ் கட்சியின் செல்வாக்கோ குறைந்து வருகிறது. அதற்கு எதிர்ப்போ அதிகரித்து வருகிறது; இழந்து வரும் செல்வாக்கை எப்படியாவது மீண்டும் பெற மக்களுக்காக சிறிது கண்ணீர் வடித்தாக வேண்டும், ஆளும் வர்க்கங்களைப் பாதுகாக்கும் அடிப்படைக் கொள்கைகளில் எள்ளளவும் மாற்றமில்லாமல். அத்தகையதொரு நாடகம் தான் நரோரா காங்கிரஸ் தலைவர்கள் கூட்டம்.

## பார்லிமெண்ட் முன்பு மறியல்

### பல்கலைக்கழக, கல்லூரி ஆசிரியர்கள் முடிவு

சென்னை நவ 24—

பல்கலை கழகம், கல்லூரி ஆசிரியர்கள் டிசம்பர் 2-ல் பார்லிமெண்டின் முன்புமறியல் செய்வது என அகில இந்திய பல்கலை கழக, கல்லூரி ஆசிரியர் சம்மேளனத்தின் நிர்வாகக் கமிட்டி முடிவு செய்துள்ளது.

மாநில அரசுகளின் சொந்த சம்பள விகிதத்தை கல்லூரி, பல்கலைகழக ஆசிரியர்களுக்கு அமுல்படுத்துவதற்கு அனுமதிக்கும் மத்திய அரசின முடிவை எதிர்த்தே இம்மறியல் முடிவு செய்யப்பட்டுள்ளது.

அச்சம்மேளனத்தின் நிர்வாகக் கமிட்டிக் கூட்டம் சென்னையில் நவ 24-ல் கூடியது.

பல்கலைகழக மானியக் கமிஷன் சிபாரிசு செய்தபடி சம்பளம் வழங்கப்படும் என்று மத்திய அரசு அளித்த வாக்குறுதிக்கு மாறான முடிவு என்றும் அக்கமிட்டி சுட்டிக் காட்டியுள்ளது.

### பிரதமருக்கு தந்தி

மேலும், முடிவு செய்யப்பட்ட மறியல் பார்லிமெண்ட் கூட்டத்தின்போது பிரிவு பிரிவாக நடைபெறும் என்றும் பார்லிமெண்ட் முன்பு மறியல் முடிந்தபின்பு ஒவ்வொரு மாநில தலைநகரிலும் நடைபெறும் என்றும் தீர்மானம் கூறுகிறது;

மேலும், பல்கலைக்கழகம், கல்லூரி ஆசிரியர்களுக்கு சம்பளம் கொடுப்பது பற்றிய மத்திய அரசின புதிய முடிவை கண்டித்து பிரதமருக்கும் மத்திய கல்வி அமைச்சருக்கும் சம்மேளனத்தின் சார்பாக தந்தி கொடுக்கப்பட்டுள்ளது.

### தனியார் ஆதிக்கம் ஒழிக்க

திட்டமிட்டுள்ள மறியலில் 10 ஆயிரம் பேர் கலந்து கொள்வர் என அச்சம்மேளனத்தின் செயலாளர் அமியாதாஸ்குப்தா தெரிவித்துள்ளார்.

மேலும், கல்வி நிறுவனங்களில் உள்ள தனியார் நிர்வாகம் ஒழிக்கப்பட்டு அரசுடமையாக்கப்படவேண்டும் என்று சம்மேளனக் கமிட்டி வற்புறுத்துவதாகவும் கூறுகிறார்.

தமிழ்நாடு பல்கலைக் கழக ஆசிரியர்கள் அமைப்பு, மதுரை பல்கலைக்கழக ஆசிரியர்கள் அமைப்பு ஆகிய இரண்டின் பிரதிநிதிகள் கூடி, தமிழ்நாட்டிலுள்ள அனைத்து பல்கலைக்கழக, கல்லூரி ஆசிரியர்களுக்கு ஒரே அமைப்பை ஏற்படுத்துவது என கூடிப் பேசி முடிவு செய்தனர்.

இதன் தொடர்ச்சியாக டிசம்பர் 14-ல் இவ்விரு அமைப்புகளின் பிரதிநிதிகள் திருநெல்வேலியில் மீண்டும் கூடிப் பேசுவர்.

### கசப்புணர்ச்சியை மறந்து

## சகோதர உணர்வுடன் பழகுக

### மாணவர்கள் - பஸ் தொழிலாளர்களுக்கு வி. பி. சி. - சௌந்தர ராஜன் வேண்டுகோள்

சென்னை, நவ.25—

மாணவர் — போக்குவரத்துத் தொழிலாளர்களிடையே நடந்து வரும் விரும்பத்தகாத மோதல்கள் குறித்து போக்குவரத்தில் உள்ள சிஐடியூ சங்கத்தின் தலைவர் தோழர் வி. பி சிந்தனும், பொதுச் செயலாளர் தோழர் அ. சவுந்தரராஜனும் விடுத்துள்ள கூட்டறிக்கையில், கசப்புணர்ச்சியை மறந்து சகோதர உணர்வோடு உறவாட வேண்டும் என்று கேட்டுக் கொண்டுள்ளனர்.

அறிக்கை வருமாறு:

அண்மையில் மாணவர்களுக்கும், பஸ் ஊழியர்களுக்கும் ஏற்பட்ட கைகலப்புகள் வருந்தத்தக்கது. ஏற்கனவே 1968-ல் சென்னை நகரில் ஏற்பட்ட கசப்பான அனுபவங்களையும், உம்பர் என்ற தொழிலாளி பலியானதையும் யாரும் மறக்க முடியாது.

ஆட்சியாளர்களின் தவறான கொள்கைகளின் விளைவாக மிகவும் பாதிக்கப்பட்ட பகுதியினர்தான் மாணவர்களும்—தொழிலாளர்களும்.

#### தவிர்த்திருக்கக்கூடிய பிரச்னையே

ஏறுகின்ற விலைவாசியும் வேலையில்லாத் திண்டாட்டமும் பயங்கரமான பாதிப்புகளை விளைவிக்கின்றன. இந்தக் கொடுமைகளையும் மற்றும் அநியாய அக்கிரமங்களையும், ஒன்று சேர்ந்து எதிர்த்துப் போராட வேண்டிய இவ்விரு பகுதியினரும் மோதிக் கொள்வது மிகவும் துரதிருஷ்டவசமான தாகும்.

போக்குவரத்து நிர்வாகமும் அரசும் முன்னெச்சரிக்கையுடன் நடந்திருந்தால் இவைகளைத் தவிர்த்திருக்கலாம்.

தொழிலாளர்களுக்கு அன்றாடம் கிடைக்கும் கலெக்சன் பேட்டாவுக்கட், மாணவர்களுக்கு பாஸ் வழங்குவதால் கிடைக்கும் வருமானத்திற்கான ஈவுத் தொகையை வழங்கியிருந்தால் இந்நிகழ்ச்சிகளை ஓரளவு தவிர்த்திருக்க முடியும்.

#### சகோதர உணர்வோடு பழகுவீர்

மாணவர்களுக்கோ மற்றவர்களுக்கோ விசேஷ சலுகைகள் வழங்குவதற்கு தொழிலாளர்கள் ஆட்சேபிக்கிறார்கள் என்பது மிகவும் தவறானதாகும். அந்த எண்ணம் தொழிலாளர்களுக்கு இல்லை.

இரு தரப்பினரும் கசப்புணர்ச்சிகளை மறந்து சகோதர உணர்வோடு கலந்து உறவாடவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறோம்.

மற்றத் தொழிலாளர்களோடு ஒப்பிடும்போது குறைவான ஊதியத்தில் அதிகமான வேலை செய்யும் போக்குவரத்து ஊழியர்களோடு ஒத்துழைத்து பயணஞ் செய்யும்படி மாணவர்களை உருக்கமாகக் கேட்டுக் கொள்கிறோம்.

## இன்சூரன்ஸ் ஊழியர்கள் ஆர்ப்பாட்டம்

### பழிவாங்கலுக்கு கண்டனம்

சென்னை, நவ. 25—

இங்குள்ள பயனீர் ப்யர் அண்டு ஜெனரல் இன்சூரன்ஸ் கம்பெனி அலுவலக முன்பு ஜெனரல் இன்சூரன்ஸ் கார்ப்பரேசனைச் சேர்ந்த ஊழியர்கள் உணர்ச்சிமிகு ஆர்ப்பாட்டம் ஒன்றைச் செய்தனர்.

தென்மண்டல ஜெனரல் இன்சூரன்ஸ் ஊழியர் சங்கத்தின் வேண்டுகோளுக்கிணங்க, ஜெனரல் இன்சூரன்ஸ் கார்ப்பரேசனின் தென்பகுதி நிர்வாகத்தின் தொழிலாளர் விரோதப் போக்கைக்கண்டித்துகடந்த 21-ந் தேதி ஆர்ப்பாட்டம் நடந்தது.

கும்பகோணம் கிளையில் சஸ்பெண்ட் செய்யப்பட்ட ஊழியரை உடனே வேலைக்கு எடுத்தல், விசாகப்பட்டினத்திலுள்ள ஊழியர்கள்மீதான குற்றப்பத்திரிகைகளைத் திரும்பப்பெறுதல், பம்பாய் சங்கத் தலைவர்களுக்கு தவறான முறையில் பதவி நிர்ணயம் செய்துள்ளதை ரத்துச் செய்தல், தீர்க்கப்படாத பிரச்னைகளை பேசித்தீர்த்தல் ஆகிய கோரிக்கைகளை வற்புறுத்தி முழக்கம் எழுப்பப்பட்டது.

கோவை ஐக்கிய தொழிற்சங்க கவுன்சிலைச் சார்ந்த பல பிரதிநிதிகளும் கலந்து கொண்ட இந்த ஆர்ப்பாட்டத்தின் இறுதியில் சங்கத்தின் கோவைப் பகுதி செயலாளர் ஆர். கிருஷ்ணமாச்சாரி பேசினர்.

### தியாகி ராமசாமி

## குடும்பத்துக்கு பென்சன்

### போராட்டக்குழு வற்புறுத்தல்

மதுரை, நவ. 23—

இந்தியாவின் வரலாற்றுக் சிறப்புமிக்க இரயில்வே தொழிலாளர் போராட்டத்துக்கு ஆதரவாக, மதுரையில் நடந்த ரயில் மறியல் போராட்டத்தின் போது, இரயில் ஏற்றிக் கொல்லப்பட்ட தியாகி ராமசாமியின் குடும்பத்துக்கு பென்சன் தரவேண்டும் என்று மதுரைப் பகுதி இரயில்வே போராட்டக்குழுவற்புறுத்தியுள்ளது,

போராட்டக்குழுக் கூட்டம் கடந்த 19-ந் தேதி கன்வீனர் தோழர் எஸ். ராஜரத்தினம் தலைமையில் நடந்தது. தோழர்கள் சையது முகமது, பூபதி, ஆர். சவுந்திரபாண்டியன், அழகர், இராகவன், பாலகுருசாமி. பிச்சை ஆகியோர் கலந்து கொண்டனர்.

#### பெர்னாண்டஸ் கோரிக்கை

தியாகி ராமசாமி குடும்பத்துக்கு பென்சன் தரக்கோரி அண்மையில் மதுரைக்கு வந்த தோழர் ஜார்ஜ் பெர்னாண்டஸ் விடுத்த வேண்டுகோளை முதலமைச்சர் திரு. கருணாநிதி நிறைவேற்ற வேண்டும் என்று கோரி தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

## வேலப்பனுக்கு அதிமுக கதவு மூடப்பட்டது

சென்னை, நவ. 24—

மறுபடியும் அதிமுகவுக்குள் பாய்ந்த வேலப்பன் எம்எல்ஏயை ஏற்றுக்கொள்ளப் போவதில்லை என அதிமுக தலைவர் எம்ஜிஆர் தெரிவித்தார்.

அதிமுகவிலிருந்து திமுகவுக்குள் சென்று 18 நாட்கள் தங்கியிருந்துவிட்டுமீண்டும் அதிமுகவுக்குள் நவ.23ந் தேதி பாய்ந்தாரல்லவா? அவரை மீண்டும் சேர்த்துக் கொள்ளப் போவதில்லை என எம்ஜிஆர் அறிவித்துள்ளார்.

மேலும் அவர், அதிமுக ஆட்சிக்கு வரக்கூடிய நிலையில் இருப்பதால் சந்தர்ப்பவாதியினர் நுழைவார்கள் என்றும் கவனமாக இருக்க வேண்டும் என்றும் கூறினர்.

## தொழிலாளர் ஊர்வலம்

ராஜபாளையம், நவ.25—

ராஜபாளையம் மில்ஸ் தொழிலாளர்கள் 22-11-74 ஷிப்டு முடிந்ததும் போனஸ் அடிப்படையில் போனஸ் வேண்டும் என்று நகரின் முக்கிய வீதிகள் வழியாக ஊர்வலமாக வந்தார்கள். இராஜபாளையம் நகரில் மேற்படி மில்லைத்தவிர மற்றமில்கள் போனஸ் அட்வான்ஸ்பட்டுவாடா செய்துள்ளது.

## போராட்ட நிதி ரூ 105

திருப்பத்தூர், நவ. 22—

வடஆற்காடு மாவட்டம் திருப்பத்தூரில் இரயில்வேத் தொழிலாளர் போராட்டச்சிகுழு சார்பில் கடந்த 16-ந் தேதி நடந்த பொதுக்கூட்டத்தில் போராட்ட நிதியாக ரூ 105-ஐ சி எஸ் பஞ்சாபகேசன் (என் எம் பி டி சி) வழங்கினர். தோழர் ஆர் பி நாயர் தலைமையில் நடந்த இக்கூட்டத்தில் 'தொழிலரசு' உதவி ஆசிரியர் வே. ராமேஸ்வரன், எம் எஸ் இளங்கோ [சி ஐ டி யூ] எஸ் எம ஜலில் (ஏ ஐ டி யூ சி) மற்றும் இரயில்வேயில் உள்ள சங்கங்களைச்சார்ந்த ஈரோடு பொன்னப்பன். பி ராமச்சந்திரன் நாயர், சி ஏ காதர் சி. பி. மேனன் வி டி வரதராஜன் பேசினர்.

#### கருங்காலி சங்கம்

மத்திய அரசுக்கும் இரயில்வே நிர்வாகத்துக்கும் துதிபாடி வரும் கருங்காலிச் சங்கமான ஐ என் டி யூ சி சார்பில் ஆயிரக்கணக்கில் ரூபாய்களைச் செலவழித்து டி வி ஆனந்தன் எம் பி யைக் கொண்டு ஓர் கூட்டம் அண்மையில் நடந்தது, அதில் விரல் விட்டு எண்ணக் கூடிய அளவுக்கே கூட்டம் இருந்தது.

## காபித் தோட்ட ஒப்பந்தம்

கோயம்புத்தூர், நவ. 24—

தமிழ்நாட்டில் உள்ள காபித் தோட்டத் தொழிலாளர்கள் 5 ஆயிரம் பேருக்கு ஊக்கப் போனசு கிடைக்கும் ஒப்பந்தம் ஒன்று ஏற்பட்டுள்ளது.

கூடுதலாக எடுக்கப்படும் காபிக் கொட்டைக்கு கிலோவுக்கு 6 பைசா வீதம் ஊக்கப் போனஸ் காபித் தோட்டத் தொழிலாளர்களுக்கு கொடுக்கப்படும் என ஒப்பந்தம் கூறுகிறது.

இதில் ஒவ்வொரு தொழிலாளியும்குறைந்தபட்சம் எடுக்கவேண்டிய காபிக் கொட்டை ஆண்கள் 30 கிலோவும், பெண்கள் 25 கிலோவும், சிறுவர்கள் 20 கிலோவும் எடுக்க வேண்டும். இக்குறிப்பிட்ட அளவுக்கு மேல் எடுக்கும் தொழிலாளிகளுக்கே இவ்வொப்பந்தப்படி கிலோ1-க்கு 6 பைசா வீதம் ஊக்கப் போனஸ் கொடுக்கப்படும்.

இவ்வொப்பந்தம் 1973 ஜனவரி 1-ந் தேதிக்கு பிறகான காலத்திற்கும் அமுல் நடத்தப்படும்,

இவ்வொப்பந்தத்தில் சிஐடியூ, இந்துமஸ்தூர் சபா, ஏஐடியூசி, முன்னேற்ற பேரவைச் சங்கம், ஐஎன்டியூசி ஆகிய சங்கங்கள் கையெழுத்திட்டுள்ளன.

### நெல்லையில்

## நெல் விலை உயர்வு

திருநெல்வேலி, நவ 24—

திருநெல்வேலி மாவட்டத்தில் அறுவடை நடந்து கொண்டிருந்த போதிலும் படி அரிசி ரூ 5-30 வீதம் விற்பனை ஆகிறது.

பச்சரிசியோ படி ரூ. 6-க்கு விற்கிறது.

130 லிட்டர் அரிசி கொண்ட கோட்டை ரூ 300-க்கு விற்கிறது.

அறுவடை சமீபத்தில் தான் முடிந்திருந்தாலும் கூட நெல்லின் விலை உயர்ந்து கொண்டே இருக்கிறது.

## கைத்தறியாளர் வேலையிழப்பு

சேலம், நவ 24—

ஏழை, மத்தியத்தர மக்களிடம் வாங்கும்சக்தி குறைந்து விட்டதால் தர்மபுரி, சேலம் ஆகியமாவட்டங்களின் கைத்தறித்துணி விற்பனையில் கடும் தேக்கம் ஏற்பட்டுள்ளது.

இதன்காரணமாக அம்மாவட்டத்தில் கைத்தறித்துணி உற்பத்தி குறைக்கப்பட்டு ஒரு லட்சம் கைத்தறி தொழிலாளர்கள் வேலையிலிருந்து தூக்கி யெறியப்பட்டார்கள்.

தீபாவளி திருவிழாச் சமயத்தில் கூட விற்பனை சரிவர நடைபெறவில்லை.

எனவே, உடனடியாக அரசாங்கம் நியாயவிலையில் தொழிலாளர்களுக்கு துணி கொடுக்கக் கோரியும் கோவாப்ரேடிவ்சொசைட்டியில் தேங்கிக்கிடக்கும் துணிகளை விற்பனையாக்குவதற்கு ஏற்பாடு செய்யுமாறும் அரசாங்கத்தைக் கோரியும் சேலம் மாவட்ட கைத்தறி கூட்டுறவு சம்மேளனம் சார்பாக மகஜர் ஒன்று அனுப்பப்பட்டுள்ளது.

1-ம் பக்கத் தொடர்ச்சி

## எழுத்தாளர்...

நாவல், கவிதைகள், இலக்கியக் கட்டுரைகள், விஞ்ஞானம், நூல் திறனாய்வுகள் முதலியவை பற்றிய ஆய்வுரை ஒன்றினைஎழுத்தாளத் தோழர்களின் விவாதத்திற்காக முன் வைத்தனர்.

மேலும் எந்த திசைவழியில் நம் இலக்கியப் படைப்புகள் இருக்க வேண்டும் என்பது குறித்தும் விளக்கினர்.

இதையடுத்து, வந்திருந்தஎழுத்தாளர்களில் 21 பேர் செம்மலர் இலக்கியம் பற்றிய விவாதத்தில் பங்கு கொண்டனர்.

இலக்கியம் படைப்பது குறித்து நடந்த விவாதத்தில் துல்லியமான, ஆழமான விமர்சனங்களும்,கருத்துரைகளும்வழங்கப்பட்டன.

இன்றைய பூர்ஷ்வா இலக்கிய வாதிகளின் போக்குகள் குறித்தும் விமர்சனங்கள் செய்யப்பட்டன.

எதார்த்த அணுகுமுறையைப் பின்பற்றி நாம் இலக்கியம் படைப்பது குறித்து அரிய ஆலோசனைகள் கூறப்பட்டன.

#### தொகுப்புரை

இறுதியாக, தோழர்கள் என் சங்கரையா, கே முத்தையா, ஏ பாலசுப்ரமணியம் ஆகியோர் தொகுப்புரை வழங்கினர்.

நமது எழுத்தாளர்கள் அனைவரும் ஓரணியாகத் திரண்டு, செயல்படுவதின் அவசியம் குறித்தும் விவாதிக்கப்பட்டது,

முற்போக்கு எழுத்தாளர் அனைவரையும் ஓரணியில் திரட்டிடும் நோக்கத்துடன் 'முற்போக்கு எழுத்தாளர் சங்கம்' என்ற ஒரு ஸ்தாபனத்தைஏற்படுத்தவும் முடிவு செய்யப்பட்டது.

இதன் நோக்கங்களை சீக்கிரமே வெளியிட்டு, உறுப்பினர்களையும் சேர்த்து, அடுத்த ஆண்டு மே மாதத்தில் எழுத்தாளர் மாநாடு ஒன்றினைக் கூட்டவும் முடிவு செய்யப்பட்டது.

#### அமைப்புக் குழு

இந்த நடவடிக்கைகளை மேற்கொள்ள செம்மலர் ஆசிரியர் தோழர் கே. முத்தையாவை கன்வீனராகக் கொண்டு, தோழர்கள் கு. சின்னப்ப பாரதி, கு. செல்வராஜ், நாமக்கல் எஸ். சுப்ரமணியம், மோகனச்சந்திரன், மேலாண்மை பொன்னுச்சாமி, [illegible] மணியரசன், தி. வரத[illegible] ஆகியோரைக் கொண்ட ஓர் அமைப்புக்குழுவும் தேர்ந்தெடுக்கப்பட[illegible]

### மேலூர் தாலுகாவில் வறட்சி - பயிர்கள் தீய்ந்தன

## தஞ்சை ஜில்லாவுக்கு படையெடுப்பு

மேலூர், நவ. 25—

மதுரை மாவட்டம் மேலூர் வட்டம் கொட்டாம்பட்டி ஊராட்சி ஒன்றியம் 27 ஊராட்சிகளைக் கொண்டது. இதில் நான்கு ஊராட்சிகளில் 7 ஆயிரம் ஏக்கர் பெரியாற்றுப்பாசனம் உள்ளது. கச்சிராயன்பட்டி கிராமத்தில் 2 ஆயிரம் ஏக்கரில் 750 ஏக்கர் மட்டும் பாசன வசதி புதிதாக பெற்றுள்ளது. இந்த 750 ஏக்கர் நிலமும் கடைக்கோடி பகுதியாக இருப்பதால் நட்வாகிய பயிர்கள் அனைத்தும் தண்ணீர் இல்லாமல் வாடிக் கொண்டிருக்கிறது. மீதமுள்ள 23 ஊராட்சிகளிலும் மழையில்லாமல் சுமார் 16 ஆயிரம் ஏக்கர் நஞ்சை நிலங்களில் உள்ள பயிர்கள் எல்லாம் தீய்ந்து போய் விட்டது. புஞ்சை பயிர்களும் தீய்ந்து, கடலை மகசூல் எடுக்காமல் சேதமாகிக் கொண்டிருக்கிறது. சென்ற வருடமே இந்த யூனியன் முழுமையும் சரியாக விளைச்சல் இல்லாமல் சாவி ஏற்பட்டு வரி வஜா செய்யப்பட்டுள்ளது. இப்பகுதியில் உள்ள மக்களில் கணிசமான மக்கள் தஞ்சை மாவட்டம் நோக்கி பிழைப்புக்காகச் சென்று விட்டனர்.

இந்த நிலையில் நிவாரணம் காண்பதற்காக 20—11—74-ந் தேதி மேலூர் தாலுகா விவசாய சங்கத்தின் சார்பில் விலைவாசி உயர்வு கண்டன ஊர்வலம் புறப்பட்டு தாசில்தார்ஆபீஸ் முன்பு ஆர்ப்பாட்டம் நடத்தி மகஜர் சமர்ப்பித்தனர். பின்னர் மேலூர் மந்தை திடலில் மு அழகர்தாஸ் தலைமையில் நடந்த பொதுக் கூட்டத்தில் தோழர்கள் இ முத்து, து பெருமாள், மு அய்யாவு, வி வாளவந்தான், கி ராமசாமி ஆகியோர் மத்திய மாநில அரசுகளின் தொழிலாளர் விரோத போக்கைக் கண்டித்துப் பேசினர். மதுரை குமார் குழுவினரின் இன்னிசைக் கச்சேரியும் நடைபெற்றது.

### விவசாயிகள் கோரிக்கை தின ஆர்ப்பாட்டம்

கொள்முதல் பற்றிய அரசியல் கொள்கையில் மாறுதல், மலிவு விலையில் இரசாயன உரம், உணவுப் பொருள்கள் சப்ளை போன்ற விவசாயிகள் சங்கத்தின் 10 அம்சக் கோரிக்கைகளை வற்புறுத்தி 20-ந் தேதி தர்மபுரி மாவட்டம் அரூர் தாலுகா அலுவலகம் முன் ஆர்ப்பாட்டம் நடந்தது. தாசில்தாரிடம் கோரிக்கை மனு அளிக்கப்பட்டது.

முன்னதாக தாலுகா விவசாயிகள் சங்கத் தலைவர் தோழர் எம் வேடியப்பன் தலைமையில் ஊர்வலம் புறப்பட்டது.

#### சங்ககிரி

இங்குள்ள ஆர் டி ஓ அலுவலகம் முன்பு நடந்த ஆர்ப்பாட்டத்தில் சங்ககிரி, எடப்பாடி, சித்தளந்தூர், திருச்செங்கோடு முதலிய பகுதிகளைச் சார்ந்த விவசாயிகளும், விவசாயத் தொழிலாளர்களும் கலந்து கொண்டனர். வி ராமசாமி, ஏ ரங்கண்ணன், எஸ் மேலீஸ், வி கே வெங்கடாசலம் ஆகியோர் கோரிக்கை மகஜர் சமர்ப்பித்தனர். முன்னதாக உணர்ச்சிமிகு ஊர்வலம் நடந்தது.

#### ஆத்தூர்

சேலம் மாவட்டம் ஆத்தூரில் தாசில்தார் அலுவலகம் முன்பு ஆர்ப்பாட்டம் நடத்தி மகஜர் அளிக்கப்பட்டது முன்னதாக கே பொன்னுச்சாமி தலைமையில் ஊர்வலம் புறப்பட்டது. ஆர்ப்பாட்டத்துக்குப் பின் நடந்த பொதுக் கூட்டத்தில் வி ராமசாமி பி இராசு, ஆர் பி ராமசாமி, மாதர் சங்க அமைப்பாளர் பச்சியம்மாள், ஆர் ரெங்கசாமி, டாக்டர் ரங்கநாதன், ஏ அஜிஸ், பி இராஜகோபால், எஸ் பழனிமுத்து ஆகியோர் பேசினர்.

## விவசாய தொழிலாளர் சங்கம் துவக்க விழா

ஆத்தூர், நவ.25—

ஆத்தூர் தாலுகா கல்பகனூர் கிராமத்தில் விவசாய தொழிலாளர் சங்க துவக்க விழாப் பொதுக் கூட்டம் கடந்த 7-ந் தேதி எம் ஆறுமுகம் தலைமையில் நடந்தது.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் வட்டச் செயலாளர் பி ராஜு, விவசாய சங்கத் தலைவர் பி தர்மலிங்கம், செயலாளர் ஆர் பி ராமசாமி, மற்றும் இ நடேசன், கே ராசு, எம் ரெங்கசாமி, ஏ கங்காதரன், ஏ சீனிவாசன், டி ஜெயராமன் பேசினர்.

### சங்ககிரி போராட்டம்:

## வேலைநிறுத்தம் - 15ம் நாள்

### தோழர் ஜி. கே. விஜயப்பன் உண்ணாவிரதம் - 10ம் நாள்

சங்ககிரி, நவ. 25—

அதிக போனஸ் கோரி கடந்த 11-ந் தேதி முதல் இங்குள்ளஇந்தியாசிமிண்ட் ஆலை மற்றும் குவாரிகளில் பணியாற்றும் சுமார் 4 ஆயிரம் தொழிலாளர்களும் வேலைநிறுத்தம் செய்து வருகிறார்கள்.

கோரிக்கையை நிறைவேற்ற நிர்வாகம் முன் வராததைக், கண்டித்தும் அரசு தலையிட வற்புறுத்தியும் சி ஐ டி யூ சங்க உதவிச் செயலாளர் தோழர் ஜி கே விஜயப்பன் கடந்த 16-ந் தேதி முதல் ஆலை முன்பாக உண்ணாவிரதம் மேற்கொண்டுள்ளார். உண்ணாவிரதம் துவங்கி இன்றோடு 10 நாள் ஆகிறது.

தொழிலாளர்களின் போராட்ட உறுதியின் விளைவாக கடந்த 20-ந் தேதி சென்னையில் லேபர் கமிஷனர் முன் நடைபெற்ற பேச்சுவார்த்தையில், நிர்வாகம் குறைக்கப்பட்ட போனசான [illegible] தான் தர[illegible]ன் என[illegible] [illegible]செய்[illegible]

ஐ என் டி யூ சி. தி மு க, ஏ ஐ டி யூ சி ஆகியவற்றின் பிரதிநிதிகள் கலந்து கொண்டனர்.

கடந்த 21-ந் தேதியன்று பேச்சுவார்த்தை விளக்கப் பொதுக் கூட்டத்தில் சி ஐ டி யூ சார்பில் வி ராமசாமி, கே நாராயணன், கருணாநிதி மற்றும் கு. ராமமூர்த்தி, எம். கல்யாண சுந்தரம் (ஐ என் டி யூ சி), கே வி ராமசாமி(இந்திய கம்யூ), கே ஏ வேணுகோபால (ஏ ஐ டி யூ சி) செ ஆர் விஜயன் (தி மு க பேரவை) ஆகியோர் பேசினர்.

முன்னதா[illegible] நாயக மாதா சங்க[illegible] தோழர்கள் திரளா[illegible] கலந்து கொண்ட பெரு[illegible] ஊர்வலம் ஒன்று நடந்த[illegible]